உ
சிவமயம்.
ஸ்ரீ முருகக்கடவுள் துணை.

# ஸ்ரீ முருகக்கடவுள் விண்ணப்பக் கலிவெண்பா.





இது
கல்லல் ஸ்ரீமணிவாசக சரணாலய சுவாமிகளால்
இயற்றப்பெற்று

திரிசிரபுரம் பிஷப் ஹீபர் காலேஜ் தலைமைத் தமிழ்ப் பண்டிதர்
திரு. ந. மு. வேங்கடசாமி நாட்டாரவர்களாற்
பரிசோதிக்கப்பெற்று

திரிசிரபுரம்:
ஜெகம் அண்டு கோ., டாட்சன் அச்சாபீசில்
பதிப்பிக்கப்பட்டது.





உ

சிவமயம்.

ஸ்ரீ முருகக்கடவுள் துணை.

# ஸ்ரீ முருகக் கடவுள்

## விண்ணப்பக் கலிவெண்பா.



காப்பு—வெண்பா.

திருமான் மருகன் சிவபிரான் றேவி
மருமான் முருகன் மகிழத்—தருமொருநல்
விண்ணப்ப வொண்கலிவெண் பாவிற்கு வேழமுகன்
கண்ணருளி முன்னிற்குங் காண்.



ஓங்காரத் துள்ளே யுலவு முருவருவாய்ப்
பாங்கா மருவுருவப் பண்புமாய்—நீங்காத
பூவண்ணம் பூவின் மணம்போல மெய்ப்போத
மாவண்ண வின்ப வடிவுமாய்க்—காவண்ணப்
பைங்குழலி யோர்பாகம் பற்றுந் திருவுருவத்
துங்கமுறு சோதிச் சுடர்க்கொழுந்தா—யெங்கும்
நிறைந்து விளங்கும் நிறைவா யுயிர்க்குட்
சிறந்து விளங்குந் திருவாய்—மறந்தோ
ரறிவுக்குட் காணு வணுவா யறிந்தோர்
குறிபுக்கு நின்றொளிருங் கோவாய்—நெறிதுற்றும்



மேலா மறையாய் விரிந்த மறைப்பொருளாய்ச்
சீலமுறு மாகமத்தின் றேறலாய்—ஞாலமதின்

மன்னுஞ் சமய மலரா வருங்குரவர்
பன்னுதமிழ் வேதப் பனுவலா—யந்நூலி

னுட்பொருளா யுத்தமர்க ளுள்ளப் பெருங்கோயி
னட்புடனே யேறிவளர் நாதனாய்—விட்புலத்தின்

மேவும் பெருந்தேவர் மேவும் பெருந்தேவாய்ச்
சேவுகைக்குஞ் சீர்த்தித் திகழ்வடிவா—யோவலிலா

நாத வடிவாய் நடமாடுங் கோலமாய்ப்
போத வடிவாய்ப் புராணமாய்—வேதனுக்கு (ய)

மாலுக்குங் காட்டா வடிவாய் வருதென்றற்
காலுக் கிறைவியுங் காட்சியாய்ப்—பாலுக்

கழுத குழவிக் கலைப்பாற் கடலை
முழுதளித்த வெங்கண் முதலாய்க்—கழுதாடுங்

காட்டினட மாடுங் கருத்தனாய்க் கூற்றுவனை
வீட்டிமுனி வர்ப்புரந்த வித்தகனாய்ப்—பாட்டுக்

குருகி யடியார்க் குரியவெலாஞ் செய்யும்
பெருகு கருணைப் பெருக்காய்—முருகலரும்

பூங்கடம்பி னீழற் பொலிந்து மனம்வாக்குத்
தாங்கடந்து நின்ற தனிவடிவாய்த்—தேங்கமழுஞ்

சோலைசெறி கூடற் றுரைத்தனஞ் செய்துலகை
மேலைநா ளாண்டதென்னர் வேந்தனாய்க்—காலைப்

பொழுதினிற மாலைநிறக் காட்சியாய்ப் போற்றி
யெழுதரிதா யோங்கு மியலா—யழுதழுது

கண்ணீருங் கம்பலையுங் காட்டிநைந்து நாடுவர்மு
னண்ணிநின்று வீடளிக்கு நாயகனாய்ப்—பண்ணி

னிசையா யிசையி னினிமையா யுள்ளு
நசையாய்ச் சிவாய நமவா—யசையு

மணியினிறை நாதமாய் வண்கா சொளியா
யணியி னிழலா யழகாய்ப்—பணிமதியங் (உ௰)

கொன்றையெருக் காத்திமத்தங் கூவிளந்தும் பையறுகு
மொன்றுசடை யாடு மொருவனாய்—நின்று

புகுவாரைக் காக்கும் பொருப்பனாய் மேனி
நகுநீற் றணிதிகழு நாதன்—றகுந்தகுமென்

றேற்றமிக்க வீரக் கழலா னினியபுக
ழாற்றும் பரிமே லழகனாஞ்—சாற்றுதற்கு

முன்னோன் முழுமுதலா முக்கண்ணன் மற்றெவைக்கும்
பின்னோ னறவடிவப் பெற்றியான்—பண்ணும்

பரமேசன் றேவர் பரிவகற்ற வெண்ணி
வரமே கொடுத்தருள வந்தோய்—சரவணத்தின்

மேவியறு சேயாய் விளையாடி யம்மையார்
கூவிப் பிடிக்கவொன்றாய்க் கூடியே—மேவுகர

மீராறுஞ் செய்ய வெழிலேறி மன்னுசிர
மோராறுஞ் சோதி யொளியாருஞ்—சீரான

பாத மிரண்டும் படைத்துத்தன் னிச்சையா
னாத னுமையி னடுவிருந்தோய்—வேதனையே

குட்டிச் சிறையிருத்துங் கொற்றவா வண்டமெலா
மெட்டிப் பிடிக்கு மிளவலே—மட்டிழியுங்

கொன்றை யணியுங் குரவர்க் குபதேச
மன்று செவியி லளித்தவா—துன்றுதிறற் (௩௰)

சேருங் கரியெட்டுஞ் சேர வொருகாத்தாற்
பாருங் கலங்கநக்குப் பற்றியே—மேருங்

குலுங்க வெறிந்து குலவுகரி யெட்டுங்
கலங்கியொரு பாற்காக்கக் காட்டி—விலங்கலோ

ரெட்டினையும் வெவ்வே றிடத்திருக்க வீசியே
மட்டிலா வாடல்புரி மைந்தவோ—விட்டனுவில்

விண்மீன் றனைப்பிடுங்கி வில்லுண்டை யாக்கிமுன்போ
னண்ணவெய்து விட்டாடும் நற்சேயே—பண்ணளிகள்

பாடி நறையருந்தும் பைங்கடப்பந் தாமமணிந்
தாடிக் களிக்கு மணிமதலா—யீடில்

குமர புரியிற் கொலுவிருந்து தேவ
ரமர விளவரசா யானோய்—பமர

மடுக்குந் தொடையன் மதுகைநவ வீர
ரடுக்குந் திருவடித்தொண் டாற்ற—நடுக்குந்

திறலிலக்கத் தெண்மர் திரண்டுபணி செய்ய
விறலிலக்க ணங்காட்டும் வீரா—பெறலரிய

சிந்தா மணியே செழுங்கனகக் குன்றமே
நந்தா மணியே நவமணியே—சந்தமுறும்

வேதனு மாலும் விரும்பித் தினம்பணியும்
பாதஞ் சிவந்தொளிரும் பாலகா—வேதமுறும் (௬௰)

வேள்வித் தகரதனின் வீறடக்கி மேலிவர்ந்து
வேள்வித் துயர்நீக்கும் வேலவா—மாள்விக்கும்

பொல்லாத பாசம் புறங்கண்ட நற்றவத்தின்
வல்லார் குறுமுனியை மாண்பளித்தோய்—மல்லாருந்

திண்டோள் வலியிற் சிறந்தெங்குந் தாமாக
வண்டமெலா மாளு மசுரேசன்—பண்டைப்

பகையிற் சுரரைப் படுத்ததுன்பத் தாழ்ந்து
தொகையிற் சிறந்த சுரரெல்லாம்—நகையிற்

சிறந்து விளங்குந் திருவடியில் வீழ
வறந்தவா தாண்டருள வுன்னிப்—பிறந்த

பயனடையுஞ் சீலர் பணிந்தேத்து மிக்க
செயமுடைய பாதஞ் சிவக்க—நயமுடைய

வாசிச் சிகியின் மகிழ்ந்தேறிப் பின்னவர்க
ணேசத் துடன்சூழ நீணிலத்தின்—மூசளிகள்

சேரும் பொழில்சூழ் திருப்பரங்குன் றத்திறங்கிப்
பாரும் புகழும் பழஞ்செந்தில்—வாரமொடு

தங்கி விறல்வீர வாகுவினைத் தூதனுப்பி
யங்கவுண வேந்தி னகமறிந்து—துங்கமிலாத்

தாருகனைக் கொன்ற தகைமைபோற் சூரனெடு
நேரு மிளைஞர் நிறைசேய்கள்—சேரத் (நடு)

தடிந்து விண்ணோர் துன்பந் தனைப்போக்கிச் சூரன்
படிந்துமயில் சேவலாய்ப் பற்றி—யடியிற்

பணியக் கனிந்து பதமதனிற் சேர்த்தும்
நணியகொடி யாக்கி நயந்தும்—அணியதோர்

பொன்னகரந் தந்து புரந்தரனார் பெற்றதொரு
வன்னமுறு யானை தனைமணந்தே—யிந்நிலத்திற்

பொற்பார் குறிஞ்சிக் கிழவனெனப் போற்றிப்
பொற்பாரும் பாரும் புகழவே— விற்பொலியுங்

கந்தா கடம்பா கருணா கராகுமரி
மைந்தா குமரா வடிவேலா—நந்தா

விளக்கமே சீவர் மலத்திமிரம் வீட்டுங்
களக்கமிலா ஞாயிறே கண்ணே—யுளக்கண்ணாற்

காண்பார் வினையைக் கருக்கும் பெருநெருப்பே
பூண்பார்க் கினிய புதுமுத்தே—மாண்பாருங்

கானக் குறத்தி கணவனே மேலான
ஞானக் குரவர்பணி நாதனே—வானிற்கு

மேலோடுஞ் சோலை விரவுந் திருக்குன்றைப்
பாலாரு மெங்கள் பழம்பொருளே—மாலாகி

வந்தார்க்கு வேண்டும் வரங்கொடுக்கு மையனே
நந்தார்க்குஞ் செந்தில்வளர் நாயகா—பைந்தார் (சூ0)

திகழு முடியாய் திருமான் மருகா
புகழுமடி தந்தாளும் பொற்பே—யிகழுங்

கொடியா ரறியாக் குருபரா வெங்கண்
மிடிதீர்க்கும் வேலேந்தும் வீரா—படியாரும்

ஆறுபடை வீட்டுக் கதிகாரர் மையல்தவிர்
நீறுபுனை மேனி நிருமலா—வாறதனிற்

கண்ட பிணிக்குக் கலங்கி யுனதடியைக்
கொண்டதொரு கீரன் குவிந்துரைத்த—வண்டர்புக

ழாற்றுப் படைக்கிரங்கி யாங்கடைந்து துன்பகற்றி
நீற்றுப் படையளித்த நீதனே—மாற்றுயர்ந்த

பொய்யா மொழிப்புலவன் போந்த வழிமறித்தே
யையார்பாட் டேற்ற வறுமுகா—செய்யார்

வயலூரா போரூரா மன்னுமலை யெங்கு
மியலாக வேறி யிருப்போ—யயலாருங்

கந்தாவா வென்றூற் கணத்தி லடைந்தவர்கள்
சிந்தா குலந்தவிர்க்குஞ் செவ்வேளே—நந்தா

வருணகிரி நாதர்க் கநுக்கிரகஞ் செய்த
வருணகிரி நாதனே யத்தா—பொருணயஞ்

சேருந் திருப்புகழைத் திண்புயத்தி லேற்றவா
தாருந் திகழுந் தடமார்பா—சீரா (எ௰)

மனுபூதி தந்தே யனுபூதி கேட்ட
கனிவான வெங்கள் கனியே—யினிய

வலங்காரம் பெற்ற வழகா மயிலி
னலங்கார மாக வமர்வோ—யிலங்குமுயர்

காலா யுதக்கொடியாய் கார்த்திகே யாஞான
வேலா யுதமேந்தும் வித்தகா—சீல

முருகா சிறுவனே முத்துக் குமரா
குருகாருந் தேனூற்றுக் கோவே—பெருகுமுயர்

செந்தமிழுக் காசிரியர் தெய்வத் திறல்சேரும்
பைந்தமிழார் பாலரூ வாயனே—மைந்துடனே

மாமதுரை யாண்ட மணிமுடியாய் நாவலவர்
மாமதுர மாலையணி வண்புயனே—தேமதுரச்

சந்தக் கவிபுனைவோர் தங்கோவே பேழைசொலு
மிந்தக் கவிக்கு மிரங்குவையே—சிந்தை

நலமில்லேன் மேலான ஞானமிலேன் றூய
குலமில்லே னற்குணமு மில்லேன்—வலமில்லேன்

சாற்று மொழுக்கமிலேன் றண்பொலியு நின்னடியைப்
போற்று மறிவுப் பொலிவுமிலேன்—வேற்று

வழியிற் சரிப்பேனன் மாதவத்தி னண்ணேன்
பழியைச் சுமப்பதற்குப் பார்ப்பேன்—மொழியதனு (அ0)

னின்னுமஞ் சொல்லுவே னேய மொடுமுளத்தின்
மன்ன விருத்தி வழிபடே—னின்னின்ன

கூடா நெறியிற் குலவுவே னானும்
பீடாரு நின்னுமம் பேசியுறும்—நீடும்

பழக்க மெனக்கிருக்கும் பான்மைதனைக் கண்டவ்
வழக்கம தாலோர் வரந்தா—புழைக்கை

மதயானை பின்வந்த வள்ளலே கன்மக்
கதயானை யைக்கொல்லுங் காலா—பதையாதென்

னெஞ்சத்துட் கொண்ட நினைப்பதனை யீடேற்றி
வஞ்சத்தைக் காட்டாது வாழ்வருள்வாய்—செஞ்சொற்

புனையுமடி யேற்குப் புகலிடம்வே றுண்டோ
நினையுடைய னன்றோ நிகழ்த்தாய்—வினையைப்

பொடியாக்கி ஞானம் புகுத்தியின்பஞ் சேரு
மடிசேர்த்துக் கொள்வாயென் னண்ணல்—படியிற்

பிறந்த பயனைப் பெறுவதற்கே யுன்னி
யிறந்தநா ளுக்கே யிரங்கிச்—சிறந்ததோர்

செந்தமிழைப் போற்றிச் சிவநெறியா மெம்முடைய
சந்தமிகு சைவ சமயமதைச்—சந்ததமும்

போற்றி வளர்க்கப் புகுந்து பலநாளா
யாற்றவு மெய்த்தே யகந்தளர்ந்தே—னேற்றூர் (கூ௰)

பெரும்பேறே யாறுமுகப் பெம்மானே யெற்குத்
தரும்பே றிதுவறிந்து தந்தாள்—விரும்பிப்

பலர்பா லுஞ் சென்றென்றன் பற்காட்டி னாலுஞ்
சிலரேயென் பங்கினிலே சேர்ந்தார்—பலரோ

சமய முணரார் தமிழைத் தெரியா
ரமயமிது வென்றே யறியார்—தமையுமே

வேண்டாமென் றுன்னுவார் வெட்கமின்றி முன்னோர்கள்
தீண்டா நெறியிற் சிறந்திருப்பார்—மாண்டாரை

நல்லவரா யாக்குவார் நானிலத்தோர் கைக்கொண்ட
புல்வரம்பை யான்சொல்லப் போமோதான்—பல்வரம்புந்

தாண்டி யுலகந் தடுமாறி யேபிறழ்ந்து
வேண்டியதைப் போற்ற விழைபாமற்—பூண்டுடுத்துத்

துய்த்துக் கழியுந் தொகையினரே மிக்கானு
ரெய்த்துக் கழிந்தநாட் கென்செய்வேன்—பைத்த

வரவணியு மெங்க ளரனுர் பயந்த
குரவணியுந் திண்டோட் குமரா—பரவியுன்பாற்

பன்முறையுஞ் சாற்றிப் பரிந்தே யருள்செயெனச்
சொன்முறையைக் கேளாத தென்சொல்லாய்—மன்முறையைக்

கைக்கொண் டரசுசெயுங் காவலர் பாலடைந்து
மிக்க வுரையால் விளம்பினேன்—புக்குந் (ரு)

தறுவாயி னின்கிருபை தன்னையன்றி வேறே
யுறுபயனோ வில்லையதை யோராய்—பெறுவதனை

முட்டின்றி யன்னோர் முடித்துத் தரும்படிநீ
திட்ட முடன்கிருபை செய்தருள்வாய்—சிட்டர்தொழும்

பாதனே யேழை படும்பா டறியாயோ
சோகனை நீ செய்காற் றுயர்போமோ—சோதிக்

கொழுந்தே மறைகள் குறித்தறியாப் பாதத்
தழுந்துமதி தந்தென்னை யாள்வாய்—விழுந்து

பணிந்தேன் றொழுதேன் பரிந்து கலுழ்ந்தேன்
றணிந்தேன் றமிழ்த்தொண்டைத் தொட்டே—னணிந்தே

னுனதுமலர்ப் பாதத்தை யுச்சிதனி லென்று
மெனது பெரும்பொருளே பென்று—நினது

காத்து மிருபுறத்துங் கண்ணிடுமுச் சத்தி
வரத்தைத் தருவதற்கென் வள்ளால்—பரத்திற்

பெரும்பே றெனக்குப் பெரிதன் றுலகம்
பெரும்பேற்றை யேகருதிப் பிச்சா—யிரும்பாய்க்

கருங்கல்லாய் நெஞ்சங் கனியாதார் தம்மை
விரும்பி யுழன்று மெலிந்தேன்—கரும்பைக்

கறித்துண்ணக் கூலி கரத்திற்கேட் பாரைக்
குறித்தும் பெருந்துன்பங் கொண்டேன்—மறித்துப் (௩௰)

புகுமா றலைத்துப் பொருள் கவருவாரும்
நகுமா றிருக்குநம ரங்கள்—தகுமாறு

செல்வதற்குச் சிந்தை திரும்பாத தென்கொலோ
சொல்வதற்குச் சிந்தை துளங்குதே—வெல்வதற்கு

வேறுவழி காணேன் விபரீத மாயுலகந்
தாறுமா றாகித் தளம்புதே—யாறுமுக

மீராறு கண்ணுமெழி லீராறு காதிருந்தும்
நேராகக் காண்கிலையோ நீதனே—சீராக

வெங்குஞ் செவியுடையா பென்னுரையு மேறலையோ
வெங்குங்கண் ணாகி யிருக்கின்றா—யங்கொருகாற்

சொன்னாலும் போதுந் துதிக்கு மடியநன்பா
லென்னா லுனைப்பேணற் கில்லையே—நின்னைக்

குறைகூறு மென்றன் குணமதொன்றே யன்றி
யறைகழலி லன்பிருத்தற் கில்லேன்—மறைதேறாச்

செந்தா மரைப்பதத்துச் செவ்வேளே சந்ததமும்
நந்தா முலைக்குறத்தி நாயகா—வந்தார்

பிணியகற்றுஞ் சேயனே பேத்தயே னெஞ்சிற்
பிணியகற்றற் கென்ன பெரிதோ—வணியாரு

மின்னற் கொழுந்தே விரும்பி முறையிடுமென்
னின்னற் கடற்கரையி லேற்ருயோ—பன்னியென்றன் (௱உ௰)

சிந்தை சலிக்குதே தெய்வமே யுன்னைநம்பி
நொந்தடியேன் வாடுதற்கு நோக்கமோ—வந்தமிலாப்

பேரழகா குன்றைப் பெரும்பதியோய் பைங்கடப்பந்
தாரழகா வேலேந்து சண்முகா—நீரழகார்

வையை நதியில் வளமார் திருவேட்டைப்
பைய விடுத்தேறப் பண்ணியே—சைவமதைக்

காத்த மறைச்சிறுவா சண்டசங்கத் தார்கலகந்
தீர்த்த முறைமறந்த செய்தியென்ன—சூர்த்தடிந்த

கொற்றவே லேந்துங் குழகா தமிழ்நாட்டைக்
கொற்றக் குடைக்கீழ்க் குளிர்தூங்கச்—செற்றமின்றி

யாண்டு பசுந்தமிழு மம்பூதி சாதனஞ்சேர்
நீண்டுவள ருஞ்சைவ நீணெறியு—மாண்டகுசீர்

பெற்ருேங்கி மேவப் பிறழா நெறிமுறையைப்
பற்றியே யாண்டளித்த பண்பெங்கே—வற்ருக்

கருணைப் பெருக்கே கலியுகத்துக் கேற்ற
வருணக் கழலாரு மையா—மருண்மிக்குப்

பொங்கியடல் செய்துவந்த புத்தரொடு புன்சமணை
யிங்ககற்றி யோட்டு மியல்பெங்கே—யங்கத்தைப்

பெண்ணுக்கி வைத்த பெருமையெங்கே வல்விடத்தைத்
தண்ணுக்கி வைத்த தகைமையெங்கே—திண்ணமுறு (௱௩௰)

மாண்பனையைப் பெண்பனையா யாக்கு மருளெங்கே
மாண்புறுதீ யேட்டின் வளமெங்கே—காண்பரிய

வெஞ்சுரத்தைத் தீர்த்த விறலெங்கே யண்டரிய
வெஞ்சுரத்தை நெய்தல்செய்த வீரமெங்கே—மண்டுமமண்

சூழ்ச்சிக்குட் பட்ட துனியார் தமிழ்நாட்டைக்
காட்சிப் படுத்துங் கருணையெங்கே—தாழ்ச்சியின்றி

நட்டகழு விற்சமணை நாடும் பருந்தருந்த
விட்டெமையே காத்த விசையெங்கே—கட்டமுறும்

பஞ்சகா லத்திற் படிக்காசு தான்பெற்றுச்
செஞ்சவே சாருஞ் சிவனடியா—ரஞ்சாமல்

வாழ்ந்திருக்கச் சோறளித்து மாநிலத்தைத் துன்புறுத்துந்
தாழ்ந்தகலி நீக்குந் தகைமையெங்கே—யாழ்ந்தமய

ரூனற் றெமது தமிழ்நாட் டகமுழுது
மீனச் சமயமெலா மீடழிந்து—ஞானந்

தருதுமுயர் சைவமணந் தானெங்கும் வீசிப்
பெருகுமொளி நீற்றுப் பெருமை—பெருகிடவே

தண்ணருளைச் செய்த தகைமையெங்கே தேவாரப்
பண்ணருளி வேண்டும் பரிசெல்லா—மண்ணலிடம்

பெற்றுலக மெல்லாம் பெரும்புகழை வீசியே
கொற்றப் பரசமய கோளரியா—யுற்றுக் (௱௪௰)

குலவியருள் செய்த குணமெங்கே மற்றும்
பலவிதமாங் காட்சிப்பண் பெங்கே—பலகில்லாக்

கொற்றஞ் சிறந்த வவுணக் குழுவினையே
முற்றக் களைந்து முகங்கனிந்து—பற்றிவந்த

தேவர்க்கு வாழ்வைச் சிறந்தவர்கள் பெற்றிடவே
யாவ லுடனளித்த வாற்றலெங்கே—மேவியுறுந்

துட்டர்களைப் போக்கித் தூயநெறி சென்றிலங்குஞ்
சிட்டர்களைக் காக்குந் திறலெங்கே—யிட்ட

மயிலெங்கே செங்கையின் மாறுமற் றுங்கு
மயிலெங்கே யுன்றனரு ளெங்கே—பயிலுந்

துணைவீர வாகுவெங்கே சுந்தரஞ்சே ரெண்மர்
துணைவீர ரெங்கேநீ சொல்லா—யிணையில்லாப்

பண்டிதரும் பாமரரும் பாரதனி லுன்பெருமை
கண்டுபெருந் தெய்வமெனுங் காரணமென்—னண்டருக்குத்

தானே துணைநீயித் தாரணியின் மன்பதைகட்
கேனே யிரங்கா திருக்கின்றாய்—வானுருங்

குன்றங் களிலே குடியிருந்தும் நின்கண்ணு
லொன்றுங் கருதாம லுற்றதென்னே—மன்றலுறு

மின்பத் தமிழ்நாட் டிறையவனீ யங்நாட்டின்
றுன்பத்தைக் காணுமற் றூங்கினையோ—வின்பக் (௱௩௰)

குறத்திமய லோகுஞ் சரிமயலோ வெம்மை
மறத்தற்குக் காரணமென் வள்ளா—லறத்தையே

யென்றும் வளர்ப்பா ளிறைவியுன்றன் றாயென்றே
யன்று பெரியோ ரணிந்துரையாய்த்—தொன்றுதொட்டுச்

சொல்லிவந்த தல்லாமற் றோற்றத்தைக் காண்கிலே
னல்லிகழுங் கூந்தலா ரம்மைசெய—லல்லல்செயும்

வல்விடத்தை யேற்றுண்டு வானவரைக் காத்தானென்
றெல்லோருஞ் சொல்லுமுறை யேற்றமே—செல்லாருஞ்

செஞ்சடையான் செய்கைத் திறங்காண்க கில்லேனு
னஞ்சுண்டா னென்றதுவும் நாட்டுரையே—யஞ்சுகரத்

தானைமுகன் விக்கினத்தி னூற்றறவிர்த் தாள்வானென்
றேனுரைத்தா ரன்னவனு மெங்குசென்றான்—மாநிலத்தி

லாரியர்கள் தெய்வ மவர்க ளெனச்சிலர்சொல்
காரியத்தை நம்புங் கணக்காச்சே—சீரியதோர்

தெய்வத் திறஞ்சேருஞ் செந்தமிழி னூற்றலதும்
பையப்பை யக்குறையும் பண்பாகி—வையகத்தின்

மேலாந் தமிழை விரும்பிக்கற் பாருமின்றிச்
சீலமுறு சைவத் திறனதனிற்—சாலப்

புகுவாரு மின்றிப் புறச்சமயத் தோர்க
ணகுமா றிழிநிலைமை நண்ணி—யகமதனிற் (௱கூ௰)

கூடா வொழுக்கங் குடிகொள்ளும் புன்சமயப்
பீடழியும் பாழை பெரிதென்றே—நாடவர்கள்

சென்றதுவு மின்னுமின்னுஞ் செல்லுவதும் நம்பெருமை
குன்றுவதுங் காணவில்லை யோகுமரா—வொன்றான

நின்பெருமை கூறு நெறியாருஞ் சைவமொடு
மன்புகழ் செந்தமிழும் வான்மிக்கா—யின்பமுற

நந்தமிழ்நா டெங்கும் நனியோங்கி யேவிளங்கிச்
சந்ததமு மிக்காகுந் தன்மைதனை —யெந்தநாட்

காண்பேனோ வென்றன் கலிதீரு மோவருளைப்
பூண்பேனோ வென்றே புலம்பலுற்றேன்—மாண்பெரிய

நந்தாப் பெருஞ்செல்வம் நன்றளிக்குஞ் சைவமொடு
நந்தாத செந்தமிழும் நானிலத்தி—னந்தியவை

கற்பாரு மின்றியவை கண்ணுவார் தாமுமின்றி
யற்பநெறிப் பாழை யதைவிரும்பிப்—பொற்பிழந்து

நந்தமிழோர் சென்றதற்பி னங்கள்பெருந் தெய்வமெனச்
சந்தமுற நீயிருந்து தான்பயனென்—கந்தனே

காலாந் தரத்தைக் கருதவிலை யோவென்று
மேலாந் தரமா விளம்பில்—வேலேந்து

செங்கரனே நின்கருணை சேரப் பெறுவோர்கட்
கிங்குகுறை யாதற் கிடனில்லை—யென்குறை (௱எ௰)

தன்னை யினதருளைச் சாருதற் கில்லாம
லின்னலுற் றிங்கே யிரங்குகின்றே—னுன்னுணை

யின்னிப் பொறுக்கேனு லென்றனு லாங்குற்றம்
பன்னிற் பலவாகும் பாராட்டி —லென்னிறையே

சேயவர்க டம்மறியா மைத்தனத்தாற் செய்குற்றந்
தாயர்தந்தை யார்பொறுத்த றுன்வழக்கே—யாயி

லெனதுகுற்றம் பாராட்டற் கில்லையே யையா
வுனதருட்கோ ளூனமுற லாமா—கனமருஞ்

சைவத்தின் மேற்சமய மில்லையென்று மங்கொளிருந்
தெய்வத்தின் மேற்றெய்வ மில்லையென்று—முய்வைத்

தருமடியார் சாற்றுந் தகுமொழியை மிக்க
பெருமையுட னெம்மனோர் பேணி—யுரிமையுள

நந்தா வளத்தமிழும் நாடுமுயர் சைவமதும்
நந்தா வணமோங்க நல்வரந்தா—கொந்தார்

கடம்பணியுந் தோளா கணத்திலுல கெல்லா
மிடம்பெயர்த்தற் குன்றலே யேனு—மடம்பரவு

சிந்தையரா மெம்மனோர் செந்தமிழ்நா டுற்றோரின்
சிந்தைதனை நின்பாற் றிருப்பியே—முந்தை

முறையி னெறியே முதிருந் தமிழை
நிறையாகக் கற்றுணர்ந்து நீண்ட—மறையாக (௱அ௰)

பச்சார்பாஞ் சைவநெறி மன்னியே யாவர்களு
மச்சமற்று வாழ வருள்வரந்தா—விச்சைதரு

கல்விக் கழகங் கணக்கின்றி நாடெங்குஞ்
செல்வத் துடனே சிறந்தோங்க—வெல்லாரு

மீகை யுளத்தரா யென்றதொரு பேருதவி
யோகையுடன் செய்ய வொருவரந்தா—வாகையுறு

நஞ்சமய வாசிரியர் நால்வர் கனிந்தளித்த
செஞ்சொற் றமிழ்மறையுஞ் சேகரமாய்—விஞ்சியுறு

மற்றுந் திருமுறையு மாண்புடனே யாவர்களுங்
கற்றுத் திகழக் கனிவரந்தா—செற்றமின்றி

நல்ல வறம்புரிந்து நந்நாட்டிற் பேதமின்றி
யெல்லோரும் வாழ்தற் கினிவரந்தா—புல்லரெனும்

பேரேயில் லாமற் பிறந்தோரெல் லாம்நல்ல
சீரே பொருந்திச் சிறந்தோங்கிப்—பாரதனி

னல்லொழுக்கங் காருணிய நாதனடிப் பாற்பத்தி
யெல்லாம் பொருந்தி யிசையாக—வல்லலற்றுக்

கொல்லா விரதக் குணமே பெருந்தவமாய்
மல்லலுறக் கொண்டு மகிழ்வரந்தா—நல்லவர்பா

னேசமொடும் பத்திமையும் நீண்ட மனத்தின்விசு
வாசமொடு மெல்லோரும் வாழ்வரந்தா—வாசகன்றோர் (௱கூ௰)

தாமின் புறுவ துலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந்தார் காண்மினென—நேமமொடு

பொய்யா மொழியார் புகன்றபெரு நீதிதனை
யையாயா னென்ற னகம்பதித்து—வையகத்தா

ரெல்லோரு மின்புற் றிருத்தலே யென்றவமாப்
புல்லினே னீதுண்மை புங்கவனே—யல்லலுறு

மித்தருண மென்னெஞ்சி னெண்ணமதை யீடேற்றி
வைத்தருளைத் தந்தாண் மறைச்சேயே—யித்தரையோ

பேய்வன்ன மென்றே பெரியோ ருரைத்தமொழி
யாய்தரவுந் தக்கதே யண்ணல்கேண்—மேயவர்கள்

பல்லோர் பழிச்சிடுவர் பல்லோர் பழித்திடுவ
ரெல்லா மெனக்கொன் றெனக்கொண்டே—னல்லா

ருரைக்கு முரையா லுறுவதொன் றுமில்லை
வரைக்குடைய வாறுமுக வள்ளா—னிரைக்கணியார்

திண்புயத்து வீரா சிறந்தமயில் வாகாநின்
றண்பதத்தி லென்னறிவு தானிலைக்க—வெண்புகுத்தி

நீயருள்வாய் கந்தனே நீயல்லால் வேறுகதி
நாயேனுக் குண்டோ நனியுணர்வாய்—தாயாயுந்

தந்தையுமா யெற்குன்றன் றண்ணருளை யேதந்து
சிந்தைமகிழ்ந் தேயமரச் செய். (உ௱)

முற்றும். சுபம்.

ஸ்ரீமுருகன் றுணை.

## கல்லல் ஸ்ரீமணிவாசக சரணாலய சுவாமிகள் இயற்றிய பிரபந்தங்கள்.

| | | | ரூ. அ. பை. |
|---|---|---|---|
| 1. | ஸ்ரீமுருகக்கடவுள் சோடசப்பதிகப் பிரபந்தம் | விலை | 1—0—0 |
| 2. | அன்னபூரணியம்மை அட்டப்பிரபந்தம் | ,, | 0-12—0 |
| 3. | திருக்கருவைப் பதிகங்கள் | ,, | 0—4—0 |
| 4. | ஸ்ரீமுருகக்கடவுள் விண்ணப்பக்கலிவெண்பா | ,, | 0—2—0 |
| 5. | செந்தமிழ்நாட்டுச் சிறப்பு | ,, | 0—1—0 |
| 6. | சேற்றூர்ப் பதிகங்கள் | ,, | 0—4—0 |

இவை ஷை சுவாமிகளிடம் கிடைக்கும்.

---

## திருச்சிராப்பள்ளி, பிஷப் ஹீபர் காலேஜ் தலைமைத் தமிழாசிரியர் பண்டிதர் ந. மு. வேங்கடசாமி நாட்டார் அவர்கள் இயற்றிய அரிய ஆராய்ச்சி நூல்கள்.

| | | | ரூ. அ. பை |
|---|---|---|---|
| 1. | கபிலர் | விலை | 1—4—0 |
| 2. | நக்கீரர் | ,, | 0—8—0 |
| 3. | வேளிர் வரலாற்றின் ஆராய்ச்சி | ,, | 0—3—0 |
| 4. | கள்ளர் சரித்திரம் (இது பொதுவாகத் தமிழ் மக்களின் வரலாற்றையும், சிறப்பாகக் கள்ளர் குலத்தாரின் வரலாற்றையும், தேச சரித்திரங்கள், கல் வெட்டுக்கள், பழந் தமிழ் நூல்கள் முதலியவற்றைக்கொண்டு விரிவாக ஆராய்ச்சிசெய்து எழுதப்பெற்றது. 350 பட்டப்பெயர்கள் இதன் இறுதியில் அகராதியாகக் காட்டப்பெற்றுள்ளன) | | 1—0—0 |

அகத்தியர், சோழர் சரித்திரம், ஒட்டக்கூத்தரியற்றிய உலாக்கள் இவை விரைவில் வெளிவரும்.

இவை பண்டிதர் ந. மு. வே. நாட்டாரவர்களிடத்திலும், சென்னை, திருநெல்வேலி முதலிய இடங்களிலும் விலைக்குக் கிடைக்கும். வி. பி. சார்ஜ் பிரத்தியேகம்.